# ஸ்ரீ சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்ரம்

**(சிவ பஞ்சாக்ஷர மந்திரத்தின் அக்ஷரங்களை வரிசைக் கிரமமாக ஒவ்வொரு ச்லோகத்தின் முதலெழுத்தாக அமைத்துச் செய்த துதி.)**

**நாகே3ந்த்3ரஹாராய விலோசனாய**
**ப4ஸ்மாங்க3 ராகா3ய மஹேச்வராய ।**
**நித்யாய சுத்3தா4ய தி3க3ம்ப3ராய**
**தஸ்மை நகாரய நம: சிவாய ॥** 1

வாசுகியை மாலையாய்க் கொண்டவரும், மூன்று கண் படைத்தவரும். உடம்பு முழுவதும் திருநீறு அணிந்தவரும், தேவனும், முதலும் முடிவும் அற்று ஆணவம் என்னும் மலப்பற்று நீங்கி எங்கும் நிறைந்திருப்பவரும், பஞ்சாக்ஷரங்களில் முதலான நகார ரூபியுமான அந்த சிவனுக்கு நமஸ்காரம்.

**மந்தா3கினீஸலிலசந்த3 னசர்சிதாய**
**நந்தீ3ச்வர ப்ரமத2 நாதமஹேச்வராய ।**
**மந்தா3ரமுக்2ய ப3ஹுபுஷ்பஸு பூஜிதாய**
**தஸ்மை மகார மஹிதாய நம: சிவாய ॥** 2

கங்கையை தலையில் அணிந்து கொண்டு அதிலிருந்து உடம்பில் பெருகும் நீரைச் சந்தனம் போல் ஆனந்தமாய் பூசிக் கொள்பவரும், நந்திகேச்வரன், பிரமத கணங்களுக்கு தலைவன் முதலிய பெரியவர்களை அடக்கி ஆள்பவரும், மந்தாரம் முதலிய கற்பக மரத்தின் பூக்களால் என்றும் பூஜிக்கப்பட்டவரும், பஞ்சாக்ஷரத்தின் இரண்டாவது எழுத்தாகிய மகாரத்தினால் பூஜிக்கப்பட்டவருமான அந்த சிவபிரானுக்கு எனது வணக்கம்.

**சிவாய கௌ3ரீவத3 னாப் ஜப்3ருந்த3 -**
**ஸூர்யாய த3க்ஷாத்4 வரநாசகய ।**
**ஸ்ரீ நீலகண்டா2ய வருஷத்4 வஜாய**
**தஸ்மை சிகாராய நம: சிவாய ॥** 3

மங்கள மூர்த்தியாயும், மலைமகளாகிய பார்வதியின் முகமாகின்ற தாமரையை மலரச் செய்வதில் கதிரவனும், தக்ஷப்ரஜாபதியின் யாகத்தை அழித்தவரும், காலகூட விஷத்தால் நீலமாகிய கழுத்தை உடையவரும், காளைக்கொடியை யுடையவரும் பஞ்சாக்ஷரத்தின் மூன்றாவது எழுத்தாகிய சிகார ரூபமாயுமிருக்கின்ற அந்த பரமேச்வரனுக்கு எனது நமஸ்காரம்.

**வஸிஷ்ட2 கும்போ4த்3 ப4வகௌ3 தமாதி3 -**
**முனீந்த்3ரதே3 வார்சித சேக2ராய ।**
**சந்த்3ரார்க வைச்வானர லோசனாய**
**தஸ்மை வகாராய நம: சிவாய ॥** 4

வசிஷ்டர், அகஸ்தியர், கௌதமர் போன்ற மாமுனிவர்களும் பணிந்து பூஜைசெய்யும் கங்கையைக் கிரீடம்போல் அணிந்துகொண்டும், சந்திரன், சூரியன் அக்னி இம்மூவர்களை தன் மூன்று கண்களாய் செய்து கொண்டும், பஞ்சாக்ஷரத்தின் நான்காவது எழுத்தாகிய வகாரமாயும் விளங்கும் பரமசிவனை நான் பணிகிறேன்.

**யக்ஷஸ்வரூபாய ஜடாத4ராய**
**பினாக ஹஸ்தாய ஸனாதனாய ।**
**தி3வ்யாய தே3வாய தி3க3ம்ப3ராய**
**தஸ்மை யகராய நம : சிவாய ॥** 5

எல்லோரும் வியந்து பக்தியோடு பூஜிக்கத்தக்க வடிவம் கொண்டவரும், ஜடை சூடியவரும், பினாகம் என்னும் வில்லைக் கையில் தரித்தவரும், எங்கும் விளங்குபவரும், மாயையின் செய்கைக்கு உட்படாதவரும், எங்கும் ஒளிரும் பிரகாசம் பொருந்தியவரும், உலகத்தையே ஆட்கொண்டவரும், பஞ்சாக்ஷரத்தின் ஐந்தாவது எழுத்தான யகாரமாயுமிருக்கின்ற அப்பரமசிவனுக்கு நான் அடிபணிகின்றேன்.

